2/4—1

உ

சிவமயம்






பன்னத்தூர்

# முத்துவீரப்பய்யா

கோவிலூர்

வேதாந்த மடாலயத்திற்கு

எழுதிவைத்த தஸ்தவேசு.




சிவமயம்

௲அ௱எ௰சு௵ ஜெனவரிமீ [illegible] யுவ௵ தைமீ ருஉ மதுரை ஜில்லா சிவகெங்கை ஜமீன்தாரி எழுவங்கோட்டைத் தாலுகா கழனிவாசல் தேவஸ்தான எல்கையிலிருக்கிற ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகரவர்களது வேதாந்த மடாலயத்திற்கு

ஷை தாலூகா பள்ளத்தூரிலிருக்கும் ராமஞ் செட்டியார் குமாரர் நாட்டுக்கோட்டை செட்டிஜாதி சுகவாசி ஜீவனம் வேதாந்தி முத்து வீரப்பய்யா எழுதிவைத்த தஸ்தவேசு.

க-வது மதுரை டிஸ்திரிக்டு திருப்பத்தூர் சப் டிஸ்திரிக்டு சிவகெங்கை ஜமீன்தாரி எழுவங்கோட்டைத் தாலூகா கழனிவாசல் தேவஸ்தான எல்கையில் கோயிலை அடுத்த தென்புறத்தில் ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகரவர்கள் மேல்கண்ட ஒரு வேதாந்த மடாலயம் ஏற்பாடுசெய்து கட்டடங்கள் கட்டி அந்த மடாலயத்தில் குருவாக இருந்துகொண்டு அநேகம் சிஷ்யர்களுக்கு வேதாந்த சாஸ்திரபாடமூலமாக அத்வைத ஞானபோதனை செய்துகொண்டிருந்ததுந் தவிர அப்படிக்கு அவ்விடத்தில் சிஷ்யர்களாயிருந்த எல்லோருக்கும் அன்னபானுதிகள் மடாலயத்திற்றனே நடப்பிவித்துக் கொண்டிருந்தார்கள்.

உ-வது தங்களுக்குப் பிற்காலம் ஷை மடாலயத்தில் அத்வைத ஞான போதனை நடந்துவர வேண்டுமென்றும் சிஷ்யர்கள் எல்லோருக்கும் அன்னபானுதிகளுக்கு ஒரு ஸ்திரமான மார்க்கம் செய்ய வேணுமென்றும் உத்தேசித்து சில பக்தர்களிடம் வாங்கிய சொத்தைக்கொண்டு சிஷ்யர்

களில் ஒருவனுகவிருந்த என்பேருல் சில பூஸ்திதிகள் வாங்கிவைத்திருந்தார்கள்.

௩-வது ஷி ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகரவர்கள் சென்ற பிலவங்க வருஷம் மீனமாசம் ௮௨ சித்தியடையும் போது ஷி மடாலயத்தில் சிஷ்யபாரம் பர்ய கிரமத்திலேயே குருஸ்தானத்தை அடையவேண்டுமென்றும் ஷி மடாலய தர்மத்துக்காக வாங்கப்பட்டதும் வாங்கப்படுவதுமான சொத்துக்களின் வரும்படிகளை அந்த தர்மத்திற்குமட்டும் உபயோகப்படுத்த வேண்டுமேயல்லாது இதர காரியங்களுக்கு எவ்விதத்திலும் யாரும் உபயோகப்படுத்தக் கூடாதென்றும் அப்போதைக்கப்போது முந்தினவர்களின் ஆக்ஞைப்படி குரு ஸ்தானத்தை அடைகிறவர்கள் ஷி தர்ம காரியங்களை விசாரித்து பரிபாலனஞ்செய்துவர வேண்டியதென்றும் ஷி பூஸ்த்திதிகளை தானுதிவி நிமயவிக்கிரயங்கள் ஓத்தி அடமானம் செய்யக்கூடாதென்றும் பரிவர்த்தனை மட்டும் செய்துகொள்ளலாமென்றும் ஆக்ஞாபித்துமிருந்தார்கள்.

௪-வது ஷி தர்மத்திற்காக ஷி ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகரவர்கள் இருந்த காலத்தில் என் பேரால் வாங்கியிருந்த பூஸ்திதிகளும் அவர்களுக்குப் பிற்காலம் அந்த ஸ்திதிகளின் வரும்படிகளைக்கொண்டும் ஷி தர்மத்திற்காக இப்பாலும் சில பக்தர்களால் கொடுத்த ஐவேஜீயைக்கொண்டும் என் பேருல் வாங்கப்பட்டிருக்கிற பூஸ்திதிகளும் கட்டப்பட்டிருக்கிற கட்டடங்களும் அடியில் விவரித்திருக்கிறேன். அந்த சொத்துக்கள் மேல்கண்ட தர்மத்துக்காக என் பேரால் வாங்கப்பட்டிருந்தது மாத்திரமேயல்லாமல் ஷி தர்மத்துக்காக வாங்கப்பட்டிருக்கிற ஷி சொத்துக்களை பரிபாலனஞ்செய்து ஷி தர்மத்துக்கு

ஷை சொத்துக்களின் வரும்படிகளை உபயோகப்படுத்த வேண்டியது முதலான யாவற்று பாத்தியங்களும் இப்போது ஷை மடாலயத்தில் குரு ஸ்தானத்தையடைந்திருக்கிற ஷை ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகரவர்களது திருவுள்ளத்துக்கு மிகவும் பிரீதியுள்ளவர்களும் ஷை சுவாமியவர்களின் சிஷ்யர்களில் முக்கிய சிஷ்யருமாகிய சிதம்பர ஞான தேசிகரவர்களை சேர்ந்ததென்பதையும் இந்த தஸ்தவேஜு மூலமாய் வெளிப்படுத்துகிறேன். மேல்க்கண்ட கட்டடங்கள் பூஸ்திதிகளின் விவரம். மதுரை டிஸ்திரிக்ட்டு திருப்பத்தூர் சப் டிஸ்திரிக்ட்டைச் சேர்ந்த சிவகெங்கை ஜமீன்தாரி எழுவங்கோட்டைத் தாலூகா கழனிவாசலில் தேரோடும் வீதிக்குத் தெற்கு தெற்கோடிய வீதிக்குக் கிழக்கு தேனுத்துக்கு வடக்கு திருக்குளம் வடிவாய்க்காலுக்கும் கோவில் மேட்டுச்செய்க்கும் மேற்கு இந்நான்கெல்கைக்குள்பட்ட வெள்ளைக்கல் மடம் ௳. குருமூர்த்திக் கோவில் க. ஓட்டுக் கட்டடம் ௨. பனந்தோப்புத் தோட்டம் க. வான்பயிர்த் தோட்டம் ௨. ஷை தாலூகா ஜெயங்கொண்டான் மாகாணம் களத்தூர் கிராமத்துக்கு நான்கெல்கை விபரம். தட்டாகுடி எல்கைக்கும் குணுக்காடு எல்கைக்கும் மேற்கு நெட்டி ஏந்தல் எல்கைக்கும் வடக்கு பூசனிக்காடு எல்கைக்கு கிழக்கு மேலச்செட்டிவயல் எல்கைக்கு தெற்கு இந்த நான்கெல்கைக்குள்ப்பட்ட களத்தூர் கிராமம் ஒண்ணுக்கு உத்தேசம் நன்சை விரையடி ௱ கள புஞ்சை குருக்கம் ௱டும் ஷை தாலூகா ஷை மாகாணம் மேலச்செட்டிவயல் கிராமத்துக்கு நான்கெல்கை விபரம். முடுக்கு வயலுக்கும் முடுக்கு வயல் எல்கைக்கும் தட்டாகுடி எல்கைக்கும் மேற்கு களத்தூர் எல்கைக்கும் வடக்கு பூசனிக்காடு எல்கைக்கும் சித்தாகுடி எல்கைக்கும் கிழக்கு சாக்கையிலிருந்து அறந்தாங்கி போகிற ரஸ்தாவுக்குத் தெற்கு

இந்த நான்கெல்கைக்குள்பட்ட மேலச்செட்டிவயல் கிராமம் ஒண்ணு. ஷி கிராமத்தின் உள்க்கடை நெட்டியேந்தல் கிராமத்துக்கு நான்கெல்கை விபரம். களத்தூர் எல்கைக்கும் அரந்தாங்கியிலிருந்து ராமனுதபுரம் போகிற ரஸ்தாவுக்கு மேற்கு ஜெயங்கொண்டான் கண்மாய் நீர்ப் புடிக்கும் பூசனிக்காட்டு வயலுக்கும் வடக்கு பூசனிக்காட்டு எல்கைக்கும் கிழக்கு பூசனிக்காட்டு எல்கைக்கும் களத்தூர் எல்கைக்கும் தெற்கு இந்த நான்கெல்கைக்குள்ப்பட்ட நெட்டியேந்தல் கிராமம் ஒண்ணு ஆகக் கிராமம் ரெண்டுக்கு உத்தேசம் நன்சை விரையடி ௱ கள புஞ்செய் குருக்கம் ௨௱. ஷி தாலூகா ஷி மாகாணம் தட்டாகுடிக் கிராமத்துக்கு நான்கெல்கை விபரம். ராயர்செட்டி வயலுக்கும் நாட்டிசேரியைச் சேர்ந்த அடைக்கலங்காத்தான் கோவிலுக்கும் அம்மணிப்பட்டி எல்கைக்கும் மேற்கு நாட்டிசேரிக் கண்மாய் நீர்ப்புடிக்கும் முண்டிசேரி எல்கைக்கும் குணக்காடு எல்கைக்கும் வடக்கு களத்தூர் எல்கைக்கும் மேலச்செட்டிவயல் எல்கைக்கும் கிழக்கு குருக்காட்டி எல்கைக்கும் அம்மணிப்பட்டி எல்கைக்கும் தெற்கு இந்நான்கெல்கைக்குள்பட்ட தட்டாகுடி கிராமம் ஒண்ணுக்கு உத்தேசம் நஞ்சை விரையடி ௱௨௰ கள புஞ்சைக் குருக்கம் ௱௪௰ ஷி தாலூகா ஷி மாகாணம் கீழச்செட்டிவயல் கிராமத்துக்கு நான்கெல்கை விபரம். பாம்பாத்துக்கு மேற்கு அரமனை வயல் எல்கைக்கும் வடக்கு ஷி கிராமம் கண்மாய் கரைக்கு கிழக்கு காடுகுடி எல்கைக் கும் தெற்கு இந்நான்கெல்கைக்குள்பட்ட கிராமம் ஒண்ணுக்கு உத்தேசம் நஞ்சை விரையடி ௨௰ள ள. புஞ்சைக் குருக்கம் ௨௱. ஷி தாலூகா பெரியகோட்டை மாகாணம் சப்பட்டையன்காட்டு கிராமத்துக்கு நான் கெல்கை விபரம். புளியந்தாவு எல்லைக்கும் மேற்கு

சாக்கையிலிருந்து அரந்தாங்கிக்கு போகிற ரஸ்தாவுக்கு வடக்கு பெரியகோட்டை எல்லேக்கு கிழக்கு பெரியகோட்டை எல்லேக்கும் புளியந்தாவு எல்லேக்கும் தெற்கு இந்த நான்கெல்கைக்குள்பட்ட சப்பட்டையன்காடு கிராமம் ஒண்ணுக்கு உத்தேசம் புஞ்செய் குருக்கம் ஙா ஷை தாலூகா ஷை மாகாணம் சிறுகப்பட்டி கிராமத்துக்கு நான்கெல்கை விபரம். சித்தாகுடி எல்கைக்கும் பூசனிக்காட்டு எல்கைக்கும் மேற்கு பூசனிக்காட்டு எல்கைக்கும் நவ்வத்தாவு எல்கைக்கும் வடக்கு பிலாவடிப்பட்டி எல்கைக்கும் கிழக்கு ரஸ்தாவுக்கும் களத்தூர்க் கண்மாய் கால்வாய்க்கும் தெற்கு இந்த நான்கெல்கைக்குள்பட்ட ஷை சிறுகப்பட்டி பனம்பட்டி முத்திரங்குடி குந்தனிவயல் பீக்கலேக்காடு குளத்துவழிப்பட்டியுள்பட கிண்சங்கியாபாகம் ௬௰௩ல் பங்கு ௬இயில் ௩ல். க-ம் ஷை தாலூகா ஜெயங்கொண்டான் மாகாணம் அம்மணிப்பட்டி ஆலனேந்தல் கிராமத்துக்கு நான்கெல்கை விபரம். உடையார் செட்டிவயல் ராயர் செட்டிவயல் எல்கைக்கும் மேற்கு தட்டாகுடி எல்கைக்கு வடக்கு குடிக்காடு குருந்தம் பள்ளம் எல்கைக்கும் கிழக்கு கோஞ்சக்குடி எல்கைக்குத் தெற்கு இதற்குள்பட்ட அம்மணிப்பட்டி ஆலனேந்தல் கிராமம் ஒண்ணுக்கு கெண்சிங்கா பாகம் பங்கு உ௰சல் பங்கு அரைக்கு நஞ்செய் விரையடி உா புஞ்செய் குருக்கம் உ. சிறுகப்பட்டி பங்கு ௩ல் கக்கு நஞ்சை விரையடி ௰உ ா புஞ்செய் குருக்கம் ா. முத்துவீரப்பய்யா.

தேவகோட்டையிலிருக்கும் வீர. லட்சுமணன் செட்டியார் மகன் ருமனுதன் செட்டி அறிவேன்.

ராயவரத்திலிருக்கும் வெ. மு. ராமனுதன் செட்டி மகன் முத்துக்கருப்பன் அறிவேன்.

காளுடுகாத்தான் சா. அ. ராமஞ்செட்டி அறிவேன்.

கல்லல் ராமஞ்செட்டியார் குமாரன் வெள்ளையப்பய்யா அறிவேன்.

காரைக்குடியிலிருக்கும் வெங்கிடாசலம் செட்டி அருணசலம் அறிவேன்.

கோட்டையூரிலிருக்கும் வீரப்ப செட்டி குமாரன் சொக்கப்பன் அறிவேன்.

காரைக்குடியிலிருக்கும் வெங்கிடாசலம் செட்டி மகன் ருமனுதன் அறிவேன்.

தேவகோட்டை சேவுகஞ் செட்டி ராமநாதன் அறிவேன்.

கண்டனூரிலிருக்கும் சின்னஞ்செட்டி மகன் வீரப்ப செட்டி அறிவேன்.

கோட்டையூரிலிருக்கும் பெ. லெட்சுமணன் செட்டி மகன் பெத்தாச்சி அறிவேன்.

காரைக்குடியிலிருக்கும் முத்துருமஞ்செட்டி மகன் குமரப்ப செட்டி அறிவேன்.

பள்ளத்தூர் மு. ருமஞ்செட்டியார் மகன் சோலையப்ப செட்டி அறிவேன்.

இந்த தஸ்தவேசு எழுதினது காரைக்குடியிலிருக்கும் சின்னப்பெரியணஞ் செட்டி மகன் பழனியப்ப செட்டி

காரைக்குடியிலிருக்கும் மு. ரு. ருமனுதஞ்செட்டியார் மகன் ஆவிச்சிசெட்டி அறிவேன்.

எண்டார்சுமெண்டுகளுக்கும் சர்ட்டிபிகேட்டுக்கும் நகல்

திருப்பத்தூர் சப்ரிஜிஸ்தர்யிலாகா கழனிவாசல் சேகரம் கோவிலூரில் முத்துவீரப்பய்யா மடத்தில் 1876 ஞு ஜனவரி மீ 19உயில் பகல் 2 மணிக்கு மேல் 3 மணிக்குள்ளாக அடியில் கையெழுத்து செய்திருக்கிறவரால் கொண்டுவந்து குடுக்கப்பட்டது. முத்துவிரப்பய்யா அடியில் கைஎழுத்து செய்திருக்கிறவர் இந்ததஸ்தவேஜை எழுதிக் குடுத்ததுண்டென்று ஒப்புக்கொள்ளுகிறமுத்துவீரப்பய்யா ருமன் செட்டியார் குமாரன் நாட்டுக்கோட்டை செட்டிஜாதி சுகவாசி ஜிவனம் கழனிவாசல் சேகரம் கோவிலூர் விசாரணை செய்யப்பட்ட சாக்ஷிகள். ருமசுவாமி அய்யன் அப்புவய்யன் புத்திரன் திருப்பத்தூர் 2-வது கிரிமனலாபீசு வக்கீல் வேலே ஜீவனம், முரு. ருமநாதன் செட்டியார்மகன் ஆவிச்சிசெட்டி லேவாதேவிஜீவனம் காரைக்குடி 1876ஞு ஜனவரிமீ 19உ நாறணய்யன் சப். ரிஜியென்று.

3-வது புஸ்தகம் 1 வது வாலம் 17 முதல் 21 வரை பக்கங்களில் 1-வது நிம்பராக ரிஜிஸ்டர் செய்யப்பட்டது. 1876 ஞு ஜனவரி மீ 21உ நாறணய்யன் சப்.ரிஜியென்று.

Seal,

